உ

கடவுள்துணை.

# கற்புநிலைமை.



சுத்தப்  பதிப்பு.

PRINTED AT THE

MANONMANI VILASUM PRESS

MADRAS.

---

1906.

இதன்விலை அணா—1.

கடவுள்துணை.

# கற்பு நிலைமை.

இது நிறைந்த கல்விப்பயிற்சியுடைய ஐரோப்பிய துரைசானிமார்களுக்காக எழுதப்படாமல் பெரும்பாலும் இந்துதேசத்துப் பெண்களைக் குறித்தே எழுதப்பட்டது.

---

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்."

என்னும் திருவள்ளுவநாயனார் திருக்குறளில், "ஒருவன் தனமனையாளிடத்தே கற்பு என்னும் கலங்கா நிலைமை இருக்கப் பெற்றால் அவன் பெறுதற்கு உரிய பொருள்களுள் மனையாளினும் உயர்வாகிய பொருள் எவை இருக்கின்றன?" என்று சொல்லப்பட்டிருத்தலால், உலகத்தில் பெண்களாய்ப் பிறந்தவர்கள் தமக்கு உரிய நாண், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நால்வகைக் குணங்களும் ஏதுவாக, மனதைப் பலவிடத்துஞ் செல்ல விடாது நிறுத்திக கற்புநிலை கெடாது இருக்க வேண்டும்.

அந்நான்கு குணங்களில் நாண் என்பது நாணம்; மடம் என்பது எல்லாம் அறிந்தும் அறியாதுபோல் இருத்தல்; அச்சம் என்பது என்றும் காணாததைக் கண்டவிடத்து அஞ்சுதல்; பயிர்ப்பு என்பது கணவர் அல்லாதவர் கை தம்மேல் படின் உடம்பு அருவருத்தலாம்.

விவாகம் இல்லாமல் கன்னிகைகளாய் இருக்கும் பருவத்தில் தாய் தந்தையர் ஆதீனத்திலும், விவாகம் ஆனபின் கணவா ஆதீனத்திலும், கணவர்க்குப் பிற்காலம் புத்திரர் ஆதீனத்திலும், புத்திரர் இல்லாவிட்டால் சகோதரர் ஆதீனத்திலும இருக்கவேண்டுமே அல்லாமல் ஒருபோதும் பெண்கள் சுவாதீனப்பட்டு இருக்கலாகாது.

கொண்ட கணவனை மேன்மையாகப் பாவித்து அவன் சொலலைத் தடுக்காமல், அவனுக்குக் கீழ் அமைந்து பக்தி விநயம் இவைகளுடனே, "பொய்சொன்ன வாய்க்குப் போஜனங் கிடையாது" என்பதனால், பொய்பேசாமல், கறந்த பால் கறந்தபடி அவன் விஷயத்தில உண்மையாய் ஊசியுஞ் சரடும் போல மனைவி அவன கருத்தின்வழி ஒழுகல் வேண்டும்.

பெண்ணைக் கட்டிககொடுக்கும் பொழுது, பிதா 'கல்வி கேள்வி நிறைந்த பண்டிதனுக்குக் கொடுக்கவேண்டும்' என்றும, தாய் 'மகள் ஐசுவரியவானுக்கு வாழ்க்கைப்படவேண்டும்' என்றும, சுற்றத்தார் 'நல்ல குலஸ்தன் வந்து வாய்க்க வேண்டும்' என்றும், அந்தப்பெண் 'அழகிற் சிறந்தவனை நாம் வரிக்கவேண்டும்' என்றும் நினைக்கிறது உலகவழக்கு; ஆயினும அது அப்படியே வாய்க்குமா? தெய்வச செயலின்படி அல்லவோ சமபவிக்கும்.

"குலமகட் கழகுதன் கொழுநனைப் பேணுதல்" என்பதனால், தன் புருஷன் அழகு இருந்த ஊரிலே குடியிருந்து அறியாத குரூபியாய் இருந்தாலும் அவனை நவ மன்மதனாகவும், என்றும் அசாத்திய ரோகம் உடையவனாய் இருந்தாலும்

அரோக்கியம் திடம் காத்திரம் உடையனாகவும், அவன் ஒரு எழுத்தேனும் அறியாத நிர்மூடனாய் இருந்தாலும் அவனைக் கல்விக் களஞ்சியமாகவும், 'பாண்டவர்களை நான் அறியேனா? கட்டிற் கால்போல் மூன்றுபெயர்' என்று வாயினாற் சொல்லி, இரண்டு விரல்காட்டி, நிலத்தில் ஒருகோடு கிழித்தவனைப் போன்ற கணக்கறியாத நிர்மூடனாய் இருந்தாலும் ஆதிசேஷன்மேல் நித்திரைசெய்யும் ஸ்ரீமகாவிஷ்ணுவைப்போல நிபுணனாகவும், உண்ணச் சோற்றுக்கும் கட்டக் கந்தைக்கும் கதியற்று, அடுப்பிற் பூனை தூங்க, கையில் அரைக்காசுக்கும் வழியில்லாத அஷ்டதரித்திரனாய் இருந்தாலும் குபேர சம்பத் துடையவனாகவும், கொக்குப்போல நரைத்துக் கண் குழிந்து பல் விழ்ந்து வில்லைப்போல வளைந்த முதுகுடைய கூனற்கிழவனாய் இருந்தாலும் நல்ல யௌவனம் உடைய விடபுருஷனாகவும் பாவனைசெய்து அவனை அவமதியாமல் எப்போதும் பாதுகாத்து நடக்கவேண்டும். "கல்லென்றாலுங் கணவன் புல்லென்றாலும் புருஷன்" என்கின்றார்களே!

மனைவியானவள் கணவனுக்குத் தாதிபோலப் பாதப் பணிவிடை செய்பவளும், மந்திரிபோலச் சமயமறிந்து நல்ல ஆலோசனை சொல்பவளும், ஸ்ரீமகாலட்சுமிபோலப் பெண்ணைப் பெண் இச்சிக்கத்தக்க அதிரூப சௌந்தரியவதியும், பூமாதேவிபோலச் சலியாத பொறுமை உடையவளும், வேசைபோலப் பர்த்தாவைச் சரச கேளி விநோதத்தால் சந்தோஷப் படுத்துகின்றவளுமாய் இருப்பதன்றி, அன்புள்ள தாய்போல இனிய உணவுகளால் போஷிக்கின்றவளுமாய்

இருக்கவேண்டும். "தாய்க்குப் பின் தாரம்" என்று உலகம் சொல்லுகின்றது அல்லவா?

ஒருவேளை கணவன் கோபித்தால் தானுங்கூடக் கோபியாமல் அவன் தன்னை ஆசிர்வதித்ததாகவும், அவன் வைதால் அவனைத் தானும் எதிர்த்துத் திட்டாமல் தன்னை அவன் வாழ்த்தினதாகவும், வவன் கைச்சேஷ்டை [அதாவது அடித்தல்] முதலிய தீமைகளைச் செய்தாலும் அவைகளை அப்படி நினையாமல் புருஷன் சரசத்தால் தன்னைத்தட்டி விளையாடுதல் முதலிய செய்கைகள் ஆகவும் நினைத்துச் சாந்தத்தோடும் அவனருகில் வந்து, "கை எப்படி நோகின்றதோ!" என்று அவனுக்கு இதஞ்சொல்லி அவன் கோபத்தைத் தணிக்கவேண்டும். அவ்வாறு செய்தால் அவன்பொல்லாத மூர்க்கனானாலும் அவனுடைய கல்லான நெஞ்சுங் கரைந்து பரம சாதுவாவான் அல்லவா?

"வல்லிடி வழக்கைச் சொல்லடி மாமி." என்று மாமியுடனே வாதுசெய்யாமல், அவளைத் தாய்போலக் கருதி, அவள் காலிலேபட்டது தன் கண்ணிலே பட்டதாக நினைத்து குடும்பபாரத்தை யெல்லாம் ஏந்திக்கொண்டு, அவளும் 'கண்மணியாகிய என் செல்வ மருமகளைப்போலத் தேடக்கிடைக்குமா?' என்று சொல்லும்படி அந்நியோந்நியமாய் நடந்து, "மாமியார் மெச்சிய மருமகள் இல்லை" என்னும் பழமொழியை மறக்கச் செய்யவேண்டும்.

'இவள் எங்களுக்கு மருமகளா? அல்ல, எங்கள் குலதெய்வமே இப்படி உருக்கொண்டுவந்தது' என்று மாமனார் மகிழும்படி அவரைத் தந்தைபோலப் பூசிக்கவேண்டும்.

கணவனுடைய சகோதரர்களைப் பேதமா எண்ணுமல் ஆதரிப்பதனல் அவர்களில் மூத்தவர்கள் 'இவள்தான் எங்கள் புத்திரி' என்றும, இளையவர்கள் 'எங்களைப்பெற்ற தாய்' என்றும் கொண்டாடும்படி நடக்கவேண்டும்.

அவர்களுடைய மனைவிமார்கள் தன்னுடைய மேலான குணத்தைக்கண்டு 'இவள் பெண்கள் நாயகம், பெண் பாத்திரம், பெண்கள் பூஷணம், பெண்கள் மாணிக்கம், பெண்ணார் அமுதம்' என்று ஸ்துதி செய்யும்படி அவர்களைச் சகோதரிகளைப்போலப் பாவித்து அவர்களுடனே கலகம் இல்லாமல் நேசிக்கவேண்டும்.

நாத்தன்மார்களையும் வரிசை வண்மை தவருமல் அவர்கள் 'இந்தப் பாக்கியவதிபோலப் பெண்கள் எங்கும் காணக்கிடையார்கள்' என்று சொல்லும்படி நன்ருய் உபசரிக்கவேண்டும்.

அடிக்கடி அண்டைவீடு அயல்வீட்டிற்குப் போகலாகாது, எவ்விடத்திற்காவது யாதொரு நிமித்தத்தால் அவசியம் போகவேண்டியிருந்தால் சிறிய பெண் குழந்தையை ஆயினும் வழித்துணையாகக் கூட்டிக்கொண்டு போகவேண்டுமே அல்லது தனிவழி நடந்து தண்டுமாரியாய்த் திரியல் ஆகாது.

'ஒரு பெண்பேசினுல் பூமி அதிரும், இரண்டு பெண் பேசினுல் நக்ஷத்திரம் உதிரும், மூன்று பெண்பேசினுல் கடல் சுவறும், நான்குபெண் பேசினால் உலகம் யதாகுமோ'

என்பதனால், ஆருடனும் இடி யிடித்ததுபோல உரக்கப் பேசாமற் குயில் கூவுதல்போல் இனிய குரலாகக் கிளி கொஞ்சுவதுபோல் மிருதுபாஷியாய் வசனிக்கவேண்டும். "பெண்கள் இருப்பிடம் பெரிய சண்டை" என்கிறார்களே.

"தாயைப் பார்த்துப் பெண்ணைக் கொள்." என்பதை நினையாமல் "நான் வீணே பிண்டமும் துண்டமும் சேர்ந்து, பிடாரியைப் பெண்பிடித்துப் பேயனானேனே, இதுவும் என் தலைவிதியா?" என்று வியசனப்படாமல், "பழம் நழுவிப் பாலிலே விழுந்தது" போலவும், "சர்க்கரைப் பந்தலிலே தேன்மாரி பொழிந்தது" போலவும், ஏதோ பாக்கியவசத்தால் எனது இல்வாழ்க்கைக்கு நல்லபெண் வந்து வாய்த்தாள்' என்று மகிழ்நன் மனமகிழும்படி குறிப்பு அறிந்து நடக்கவேண்டும்.

'கணவனுடைய சம்பாத்தியத்தில் வரும்பொருள் அளவிற்குத் தக்கபடி மிதமாய்ச் செலவுசெய்யாமல் கண்டபடிக்கெல்லாம் கைகொண்டமட்டும் செலவழிக்கின்றாளே, இவள் இன்னம் சிலநாளில் அவன் தலையில் ஓட்டைக் கவிழ்ப்பாள்' என்று பிறர் இகழாவண்ணம் திறமையுடனே சிறுகச் செலவு செய்யவேண்டும்.

உலகத்தார், இராக்காலத்திற்கு உதவியாகப் பகற்காலத்திலும், மழைகாலத்திற குதவியாகக் கோடைகாலத்திலும், முதுமைக் குதவியாக இளமையிலும், மறுமைக் குதவியாக இம்மையிலும், வேண்டியவைகளைத் தேடிவைத்துப் பாதுகாப்பது போல, இல்வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களை

யெல்லாம் தருணம் அறிந்து சேகரித்துப் பின்னுக்கு ஆகும் என்று சிக்கெனக் காப்பாற்றல் வேண்டுமே அல்லது வீட்டில் உள்ள பண்டங்களை அநியாயத்தில் அழிக்கல் ஆகாது.

ஆணாய்ப் பிறந்தவர் பிதாவானாலும், சகோதரரானாலும், பெற்ற பிள்ளையானாலும், மற்றும் எவரானாலும் அவர் இருக்கும் இடத்தில் அச்சம் இன்றி இருக்கல் ஆகாது. 'ஐந்து வயது ஆண்பிள்ளையைக் கண்டால் ஐம்பதுவயது பெண்பிள்ளையும் எழுந்திருக்க வேண்டும்' என்கிறார்களே.

அன்னம் போலவும் பெண்யானை போலவும் மிருது நடையாகத் தலை இறங்கித் தன் பெருவிரலை அல்லது நிலத்தைப் பார்த்தவண்ணமாய் நடக்கவேண்டுமே அல்லாமல் பூமி அதிரும்படி விசையாய் நடக்கல் ஆகாது.

ஆண்மக்களிலாவது பெண்மக்களிலாவது துஷ்டர்களாய் இருக்கின்றவர்கள் தாரதம்மியம் பாராமல், அக்கிரமமாய்ப் பேசினால் "அதென்ன உடம்பிலே காய்த்துத் தொங்குகிறதா? நாய் குலைத்து நத்தம் பாழாகுமா?" என்று நினைத்துச் சாதுவாய்ப் போகவேண்டுமே அல்லாமல் அவர்களை எதிரிட்டுப் பத்திரகாளிபோல அஞ்சாது "தெருச்சண்டைக்கு இடுப்புக்கட்டல்" ஆகாது.

கணவனாவது மற்றவர்களாவது ஏதேனும் ஒன்றைக் குறித்துப் பேசிக்கொண்டு இருந்தால், "கிணற்றுத் தவளைக்கு நாட்டுவளப்பமேன்?" என்று தன் பாட்டிற்குத் தானிராமல் 'அது என்ன சமாசாரம்?' என்று அவர்களை நேரே விசா

ரிக்கவும், சாடையாய்க் கதவின்சந்தில் அல்லது சுவர்க்கோழி போலச் சுவரின் அருகில் ஒன்றியிருந்து கேட்கவுங் கூடாது.

மணஞ் செய்யப்பட்டு மாமி வீட்டிற்கு வந்தவுடனே, "வந்ததே சிறுக்கி பந்தடித்தாள், வரவரச் சிறுக்கி கழுதை மேய்க்கிறாள்" என்னும் கதைபோல், ஆரம்ப சூரத்துவமாய் மிக்க ஜாக்கிரதையுடனே செவ்வையாய் நடந்து பின்பு வர வரச சோம்பலை மேற்கொண்டு கபடத்தினால் "எவனோ செத்தான் அவளேன் அழுதாள்?" என்பதாக, எவ்வளவாவது சமுசாரக் கூர்மையில்லாமல் கடனற்றதுபோல இருக்கலாகாது.

புருஷனுக்குப் பொருள் வரவின்றி அவன் வறுமைப் படுங் காலத்தில், "ஏருழுகிறவன் என்னசெய்வான் பானை பிடித்தவள் பாக்கியம்" என்று நினைக்கவேண்டுமே அல்லாமல், அவன் சம்பாதிக்க இல்லை என்று மனஞ்சலிக்கும்படி அவனைச் செல் அரிப்பதுபோல எந்நேரமும் வருத்தப்படுத்தல் ஆகாது.

பரபுருஷருடைய முகத்தைப் பாராமலும், அவர்களுக் கெதிரே பல்லைக் காட்டிச சிரியாமலும், பரிகாசஞ் செய்யாமலும், பக்குவமாய் இருக்கவேண்டும். "சிரித்தையோ சிரைக் குலைத்தையோ?" என்று பழமொழியும் இருக்கின்றதே.

தாமரை இல்லாத தடாகமும், சந்திரன் இல்லாத ஆகாயமும், புலவர்கள் இல்லாத சபையும், அரசன் இல்லாத நாடும், மந்திரி இல்லாத அரசாட்சியும், படைத்தலைவன் இல்லாத சேனையும், தெய்வஸ்துதி இல்லாதநாவும், நற்சிந்தை இல்லாத

நெஞ்சும், கிருபை இல்லாத கண்ணும், பயன் இல்லாதசொல்லும், மணம் இல்லாத மலரும் போலக் கற்புடை மனைவி இல்லாதவீடு சிறப்பின்றி இகொட்டுக் கொப்பாம்.

கண்டவர்கள் கேட்டவர்கள் எல்லாம் 'இந்த உத்தமி கல்வியிற் கலைமாதோ? கற்பில் அருந்ததியோ? கருணையில் பார்வதியோ? பரிசுத்தத்திற் பவானியோ?' என்று அதிசயிக்கும்படி விவேகமும், கற்பும், இரக்கமும், கசியும் உள்ளவளாய் இருக்கவேண்டும்.

பெற்றபிதா முதலானவர்கள் தங்கள் பெண்ணைப் பார்க்கும்படிப் பெண்வாழும் ஊருக்குவந்தால், திடீரென்று அந்த வீட்டிற்குள்ளே நுழையாமல் பெண்ணின் நடத்தையை அண்டை அயலில் விசாரிக்கவேண்டும். விசாரிக்கும் அளவில் "அது கெட்டது மூதேவி, அவள் ஆருக்கும் அடங்காள் ஒருவர் பேச்சுங் கேளாள், தான் பிடித்த முயலுக்கு மூன்றேகால் என்று சாதிக்கிறவள், அவள் எல்லாருடனும் வில்லங்கமாக வலியவழக்குத் தொடுக்கின்ற ஜக சண்டி, அவள் மூன்று லோகமும் பூசை கொண்ட முழுச் சாமியார், அவள் மானிட வடிவு எடுத்து வந்த யமராட்சசி, அவள் கொண்டவனைத் துரும்பு அளவாவது மதியாள், கொஞ்ச நாளில் அவன் கழுத்துக்கே கயிறு கொண்டு வருவாள், அந்தக் கரிகாலி முகத்தில் விழித்தாலும் கஞ்சி கிடையாது, அவள் அரை நொடியில் குடும்பத்தைக் கலைத்துக் குடிவை வேறு ஆக்குவாள், அவள் வெல்லச் சதுரி வல்லாள கண்டி, அவள் எல்லாருடைய தலைப் பாகையும் தாழ இறக்கி வைப்பாள், அந்தக் கொள்ளையை

என்ன என்று சொல்லுகிறது, எண்ணைத் தொலையாது ஏடிடங்கொள்ளாது, ஐயோ! தர்மதேவதைபோல இருக்கிறீங்கள் ஜன்மாந்தரத்தில் என்னபாவம் செய்தீர்களோ? இந்தச் சண்டாளிவந்து உங்கள் வயிற்றில் பெண்ணாய்ப் பிறந்தாளே? செத்தாலும் தோஷமில்லை, இவள்பெற்றார் பிறந்தார் பெயரையும் கெடுக்கவந்தவள், இந்தக் கொடும்பாவி சமாசாரத்தைக் கேட்கிறது புண்ணியமா? புருஷார்த்தமா? இவள் சரித்திரத்தைப்பேசிய வாயை நெய்விட்டுச் சுத்தி பண்ணவேண்டும்'' என்று நாராசத்தைக் காய்ச்சிக் காதிலே சொருகுவதுபோலச் சொல்லக் கேட்டால், அந்த வீட்டில் எடுத்தடிவையாமல் முன்னிட்ட காலைப் பின்னிட்டபடியே திரும்பிப்போய்ச் செத்ததிலே ஒன்றாகப் பாலை வார்த்துத் தலைமுழுகி விடவேண்டுமே அல்லாமல், மறுபடி அந்தத் திசையை எட்டிப் பார்க்கலாமா என்னும்படி துன்மார்க்கியாய் இராமல், "அம்மம்ம! இந்தப் புண்ணியவதிக்கொப்பாக ஆரைச் சொல்லலாம்? இவளுடைய நன் னடக்கை மற்ற பெண்களுக்குத் தவஞ் செய்தாலும் வருமா! பெண்ணுக்கு மெல்லி என்றும் நல்லாள் என்றும் சொல்லப்படும் பெயர் இவளுக்கே தக்கது, இவளோ மாமியார் மாமனார் முதலிய சகலருக்கும் கண்ணுக்குக்கண்ணா இருக்கின்றவள், இவள் பத்தரை மாற்றுத் தங்கம், பதிவிரதா சிரோமணி, இலட்சுமிக்கும் இவளுக்கும் என்ன பேதம்? இவள்மேல் ஈஷத்தாவது தோஷஞ் சொல்லலாமா? இவள் தீண்டாநெருப்பு, இவளைக் குறித்துத் தோஷஞ் சொன்ன நா அழுகிப்போம், இப்படிப்பட்ட பதிவிசுநாங்கள்

எங்கும் கண்டதில்லை, இவள் மழை பெய் என்றால் பெய்யும், வெயில்காய் என்றால் காயும், பொழுது விடி என்றால் விடியுமே? இவளைப் பெறும்படி நீங்கள்செய்த புண்ணியமே புண்ணியம் என்று செவியில் அமிர்தத்தைச் சொரிவதுபோலச் சொல்லக்கேட்டால், அப்பொழுது "புத்திரசதகுணம் புத்திரி" என்று நினைத்துச் சந்தோஷித்து அவர்கள் பெண்ணுக்கு மாமி வீட்டில் தாராளமாய்ப் பிரவேசிக்கும்படி அவள் வரன்முறை தவறாது ஒழுகவேண்டும்.

ஒருவனுடைய மனைவியிடத்தில் நற்குண நற்செய்கைகள் உண்டாயிருந்தால், அம்மனையினிடத்தில் ஒன்றும் இல்லாதிருந்தாலும் எல்லாம் உள்ளனவேயாம்; அவளிடத்தில் அவை இல்லாதிருந்தால் அங்கு எல்லாம் இருப்பினும் ஒன்றும் இல்லையாம.

இம்மையில் கணவனைப் பூசித்தபெண்கள் மறுமையில் சுவர்க்கத்தில் தேவர்களால் பூசிக்கத்தக்க பெருஞ்சிறப்புப் பெறுவார்கள்.

பெண்கள் தமது கற்பினால் காக்கும் காவலே காவல் ஆவதன்றி, அவர்களைக் கணவர் சிறையினால் காக்கும் காவல் என்னபயனைச்செய்யும்? "அறைகாத்தான் பெண்டிழந்தான்." என்று சொல்லப்படுகின்றதே.

"விலைமகட் கழகுதன் மேனி மினுக்குதல்." என்பதனால், குலமகட்கு அது விரோதம் என்று நினையாமல் ஜன்மாந்தர புண்ணியத்தால் பொருள் உண்டாயிருந்தால், அன்னியர்கள் இச்சிப்பதற்கு அன்றி, தன் கணவன் கண்டுகளிக்கும்

படி, தன்னை விலை உயர்ந்த வஸ்திர பூஷணங்களால் அலங்கரித்துக்கொள்ளலாம்; அவை இல்லாவிடில் இல்லையே என்று ஏங்கித் தன்முகம் பாழ் அடைய விடாமல், மஞ்சள் பூசி குங்குமம இட்டு முகத்தை அழகு பெறச் செய்ய வேண்டும்.

"மண்ணைக்கட்டி மாப்பிள்ளைக்கு எருமுட்டை பணியாரம்" என்பதாகத் தாறுமாறாய்ச் செய்யாமல், காலம் அறிந்து கிரமமாகப் புருஷனுக்கு ஸ்நானம் அனுஷ்டானம் இவைகளுக்கு இடம்பண்ணி, வேளைக்கு ஏற்ற பக்குவமான போஜனம தாம்பூலம் வஸ்திரம் பூஷணம் முதலானவைகளை தடையில்லாது சித்தப்படுத்தி வைக்கவேண்டும்.

மனைவியானவள் சகலவித பூஷணங்களையும் துறந்து இருந்தாலும், மங்கல சூத்திரத்தைமாத்திரம் துறக்கக் கூடாது, அதுபோல, தந்தை தாய் முதலிய பந்துக்களை எல்லாம் விட்டுப் பிரிந்தாலும் கணவனை மாத்திரம் பிரிந்து இருக்கல் ஆகாது. அறிவில் குறைந்ததாகிய பறவைகளுள் அன்றிற் பெடையும் அல்லவோ தன் சேவலைப் பிரிந்து இருக்கச் சகியாது உயிர் விடுகின்றது.

"பாத்திரமறிந்து பிச்சையிடு கோத்திரமறிந்து பெண்ணைக்கொள" என்பதனால், அறிவு ஒழுக்கம இவைகளில் சிறந்த சான்றோர்களே தானம் பெறத் தக்கினவர்களாயினும் "பெரியவீடென்று பிச்சைக்குப் போனால் கரியை வழித்து முகத்திலே தடவினார்கள்" என்று, சொல்லாவண்ணம் எளியவர்களை பரிகாசம் செய்யாது அவர்கள் 'தேகி' என்று வந்தால் 'நாஸ்தி' [இல்லை] என்று சொல்லாமல் திதி முதலானவை

ராட்சசர்களுக்குப் பிரீதியாகச் செய்யும் பூரி தானம்போல வாவது, அவாகளுக்கும் தம்மால் இயன்றமாத்திரம் பிச்சை இடவேண்டும. "இல்லையென்றவிடத்தில் பல்லியுஞ் சேராது என்கிறார்கள் அல்ல.....

தாய்வீடு அருகில் இருக்கிறது என்று யாருடனுஞ் சொல்லாமல் நினைத்த நேரம் எல்லாம் அவ்விடத்திற்கு ஓடி 'இவள் ஓடுகாலி' என்று பெயர் எடுக்கல் ஆகாது. அடிக்கடி "தாய்வீட்டோடிய பெண்ணும் பேயோடாடிய கூத்தும் ஒக்கும்" அல்லவோ?

மாமியார் மாமனார் முதலானவர்கள், பெருவயிறு கொண்டது அறியாமல் சிமந்தத்திற்கு நாள்வைத்துக் கொள்வது போல தெரியாமல் நாம், 'இந்தப்பெண்ணைக் கொண்டால் சுகப்படலாமே' என்று நினைத்து, பகீரதப் பிரயத்தினப் பட்டுத் தேடினதற்குத் தகுதியாய் வாய்க்காமல், "பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது" போல வந்து லபித்ததே, நம்முடைய துர்ப்பாக்கியம் என்ன என்று அவர்கள் வியசனப படும்படி ஏடாகூடஞ் செய்யல் ஆகாது.

சமுத்திரம்போல வற்றாத செல்வத்தில் பிறந்தாலும் ஏழைக்கு வாழ்க்கைப்பட்டால், அந்தச் செல்வப் பெருக்கையே பாராட்டிக் கர்வத்தால் அவனை அசட்டை பண்ணாமல் "மலையிலே விளைந்ததானாலும் உரலிலே வந்துதானே மசியவேண்டும். என்பதற்கு இசைய, அடங்கி நடக்க வேண்டும்.

"நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறிவென்பது பெரும்பேதைமைத்தே" என்பதனால், தன் பேதைமை காரணமாக உலகத்தில் அந்நியராகிய செல்வரின் படாடோபம் [ஜம்பம்] கண்டு, நெய்க்குடத்தைத் தலையில் வைத்து எண்ணம் இட்டவனைப்போல, நாம் இந்தச் ஸ்ரீமான் பக்ஷம்சேர்ந்தால் யாதொரு வருத்தம் இல்லாமல் எக்காலமும் வேளைதவறாது, பால் பழங்களுடனே நெய்யாரக் கையார நல்ல ராஜபோஜனம் உண்டு சுகித்து, வாசனைத் திரவியங்களால் நலங்கு இட்டுக்கொண்டு, பனிநீரில ஸ்நானஞ்செய்து, இருபக்கத்தும் உள்ள கரைக்கும் முன்தானைக்கும் விலை உயர்ந்த முத்து பச்சை கெம்பு வயிரங்கள் வரிசை வரிசையாகக் கோர்த்து இடை இடையே நெருங்க மல்லிகை தாமரை குமுதம்போல விசித்திரமான பூக்கள் அமைத்துப் பிடித்தால் பிடிக்குள் அடங்கும்படி அதிக நாணயமாகிய இழையால் ஆயிரம் பொன் பெற்ற இந்திரவர்ணப் பட்டு என்னும் பொற்சரிகைச் சேலை உடுத்து, முத்துக்கச்சுப் பூண்டு, மேகம்போலக் கறுத்துத் தழைத்து நெய்த்து நெறித்து நெரிந்து சுரிந்து நீண்டு சுருண்டு கடைகுழன்ற கூந்தலை வாசனைசேர்த்த மயிர்ச்சாந்து பூசி, தங்கச்சீப்புச் சிக்கங்கோல் கொண்டு சீவிச் சிக்கறுத்துவாரி வகிர்ந்து திவ்ய பரிமள புஷ்ப மாலைகளை வைத்து முடித்து நெற்றியில் ஜவ்வாது திலதம் இட்டு கண்ணுக்கு மை எழுதி, கழுத்துக்குக் கஸ்தூரிபூசி, மார்புக்குச் சந்தனத்தால் தொய்யில் வரைந்து, தோளுக்கு விற்கோலந் தீட்டி, காலுக்குச் செம்பஞ்சு ஊட்டி, கன்னத்திற்குக் கறுப்பு எழுதி, உலகம எலலாம விலை மதிக்கத்தக்க நவரத்தின கசிதமாகிய

தலைப்பணி, நுதற்பணிகளும், ஆரம் கேயூரங்கள் முதலிய வைகளும ஜாஜ்வலலியமாய்ப் பிரகாசிக்க, கைகளில் பொற்சரி பொற்கடகங்கள் விளங்க, கால்களில் ரத்நினச சதங்கை ரத்தி னச் சிலம்புகள் கலீர் கலீர் என்று ஒலிக்க, நாசியில் வச்சிர நத்து வச்சிரமூக் கணிகள் கண் கூசும்படி தகதக என்று ஜொலிக்க, கேசாதிபாத பரியந்தம பொன் காய்த்தாற்போலத் தோன்ற, மெய்யிற் பூசிய சந்தனம் குங்குமம் கற்பூரம் கதம் பம் முதலாகிய பரிமளவர்க்கம காததூரம கமகம என்று மணக்க, வலது முன்கையிற் பற்றிய பூங்கொத்தில் பஞ்ச வர்ணக்கிளி கொஞ்ச, அண்டகோளத்தை அளாவப் பளிங்கி னுல் கட்டப்பட்ட மலைபோலும் பெரிய ஏழடுக்கு உப்பரி கையில், மாணிககமயமான சித்திரமேடைமீது, தாதிமார் காம்பரிந்து பரப்பிய மெல்லிய புஷ்பத்தின்மேல் வடிவிற் சிறந்த சில பெண்கள் மேகலை தாங்க, சில பெண்கள் சாமரை போட, சில பெண்கள் ஆலவட்டம அசைக்க, சில பெண்கள் தாம்பூலம் மடித்து நீட்ட, சில பெண்கள் பவளக் காளாஞ்சி யேந்த, சில பெண்கள் ஆரத்தியெடுக்க, சில பெண்கள் கை லாகுகொடுக்க, சில பெண்கள் நிலப்பாவாடைவிரிக்க, சில பெண்கள் பிடித்துவரும் ஆணிமுத்துப் பந்தலின்கீழ்ப் பூங் கொடிபோல் இடை அசைய அன்னம்போல் அடிபெயர்த்து மதரதிபோல் கைவீசி கலாபத்தை விரித்து மயில் உலாவி நடிக்கிறதுபோல உடல் குலுங்கச் சொகுசாகச் சாரியுலாவி, நாம் வைப்பாட்டியானாலும் கொண்டபெண்டாட்டியாகிய கண்ணாட்டிபோல் இருந்து, சம்பிரமத்துடனே சகல போக மும் அனுபவித்துக்கொண்டு நல்ல சீமாட்டியாய் வாழலாமே,

2

இதைவிட்டு இந்தத் தரித்திரம் பிடித்த காமாட்டிப் படுவா ஸேக் கட்டிக்கொண்டு அழுவானேன்'' என்று வீண் எண்ணங் கொண்டு, கற்பு அழிய வறியவனாகிய தன்னைக் கைப்பிடித்த கணவனைக் கைவிடக்கருதி, அவன் மனம் வெறுக்க, கொள்ளி கொண்டு சுடுவதுபோலக் கடுஞ்சொற் சொல்லி, சீறுமாறு பண்ணல் ஆகாது. அப்படிச்செய்தால் "அரசனைநம்பிப் புருஷனைக் கைவிட்டவள்'' கதையாய் முடியும். அன்றியும் அது "வாய்த் தவிடும்போய் அடுப்பு நெருப்பும் அவிந்தாற்போல்'' ஆகும். மேலும் வியபசாரிப்பட்டமும் பழியும் விளையும் மறுமையில் ரௌரவநரகத்தில் வீழ்ந்து அளவிறந்தகாலம் கொடிய வேதனையும் அநுபவிக்கவேண்டி வரும்.

கணவனோடே எதிர்த்து நிற்பவள் யமன்; அவனுக்குக் காலம அறிந்து உண்டி சமையாதவள் தீராநோய்; சமைத்த உணவை அவனுக்குப் பரிமாறி அவன் உண்ணச் சகியாதவள் இல்வாழ்பேய்; அன்றியும் இம்மூவரும் கொண்டவன் கழுத்தை அறுக்கவந்த கூர் அரிவாள் ஆவார்கள்.

மேலும் கணவனைக் கோபித்து உக்கிரமாகப் பார்த்தவள் வேங்கைப்புலி ஆவாள். அவனை வரம்புகடந்து வைதவள் கொள்ளிவாய்ப் பிசாசு ஆவாள். அவனைக்கண்டு எழுந்திராமல் கிடந்தவள் மலைப்பாம்பு ஆவாள்.

சோழநாட்டில் ஒரு வேளாளன் ஒருநாள் தன் பெண்சாதியுடனே "இன்றைக்குப் பெரியவர் ஒருவர்க்கு அமுது படைக்க வேண்டும்'' என்று சொல்ல, அவள், இது நல்ல

வேடிக்கைதான், "தன்னைப்பெற்ற ஆத்தாள்கிண்ணிப்பிச்சை எடுக்கிருள், தம்பி கும்பகோணத்திலே கோதானம் பண்ணு கிருன்" என்பதுபோல, வீட்டு இருப்பு அறியாத ஆண் பிள்ளையைக்குறித்து என்ன சொல்லுகிறது? "அஞ்சு மூன் றும் அடுக்கா இருந்தால் அல்லவோ அறியாதபெண்ணும் கறியாக்குவாள்" அமுது படைக்கிறதற்கு அரிசிவேண்டுமே! பதார்த்தம வேண்டுமே! "வெறுங்கையைக்கொண்டு முழம் போடுவது எப்படி?" என்றுசொல்ல, அவன் சொற்படி சகலமும் சேகரித்துக்கொடுக்க, "வேண்டுமென்ருல் வெண் ணெய் மொத்தை போல நறுக்கல் ஆகாதா" அவளுக்குச் சம்மதி இல்லாமையால பின்னும் அவள் "அரிசி ஆழாக்கு ஆனுலும் அடுப்பங்கட்டி மூன்று வேண்டும" அல்ல வோ? பானை சட்டி முதலாகிய ஏனம் இல்லாமல் எவ் விதத்தில் சமையல் ஆய்விடும்? என்ன, அவைகளையுங் தரு வித்துச் "சீக்கிரத்திலசமை" என்ன, அவள் நீ போ உனக்கு என்ன? எனக்குத் தள்ளாது, என்னுலே முடியாது, தலே நோகிறது என்று போக்குச சொல்ல, அவன் "அடிசெக்கு உலக்கைபோல் இருக்கிற உனக்கு வந்த கேடு என்ன" என்று கேட்க, அவள் "எருதுநோய் காக்கைக்குத் தெரியுமா? தலே நோயுங் காய்ச்சலும் தனக்கு வந்தால் அல்லவோ தெரியும்" என்று, பாயை விரித்து நெடுமுக்காடிட்டுப் படுத்துக் கொள்ள, அவன் "இவள் என்ன சண்டியாயிருக்கிறுள்" என்று கோபத்தினுல் மெல்லென ஓர் அடி அடிக்க, "ஆ! ஆ! அட சண்டாளா! என்னே அடித்துக் கொல்லவா ஏற்பட்

டாய்? உரலிலே தலையை நுழைத்துக்கொண்டு உலக்கைக்குப் பயப்பட்டதனாலே விடுமா? சும்மா கொல்லு, இனி நான் உயிரோடு இருக்கிறதில்லை, ஊமத்தங் காயைத்தின்று பழி போடுகிறேன்" என்று தெருவிலே வந்து பெருங்கூச்சல் இட்டுப் புருஷனைத் தூற்றினாள். இப்படிப் பட்டவளைக் குறித்துத்தானே "தூற்றும் பெண்டிர் கூற்றெனத் தகும்" என்று சொல்லுகிறது. இந்தச் சரித்திரம் மணவாளநாராயண சதகத்தில் "ஐயருக் கமுதுபடை" என்னும் பாடலிலும் சொல்லி இருக்கின்றது.

தென்னாட்டில் சாதுவான ஒருவனுக்கு வாய்ப்பட்டி ஆகிய ஒரு படுபாவிவந்து பெண்டு வாய்த்தமையால், அவன் அவளுடைய மூர்க்கத்துக்கு அஞ்சிச் சுயேச்சையாய் ஒன்றும் செய்யக் கூடாமல், அவள் இட்டது சட்டமாக வருத்தத் தோடு காலம் கழித்து வருகையில், ஒருநாள் அவனுக்குக் கிரகசாரம் போதாமல் ஒளவை என்பவள் அவன் இடத்திற்கு வந்து உணவு கேட்க, "நல்லது" என்று சொல்லி, "பெண்ணின் குணமறிவேன் சம்பந்தி வாயறிவேன்" என்பதற்கு ஏற்க, தன் பெண்சாதி குணத்தைத் தான் அறிந்தவன் ஆகையால் ஒளவையை வீட்டிற்குள் அழைத்துப்போகாமல் தெருத் திண்ணையில் தானே இருக்கவைத்து, தான்மாத்திரம் உள்ளே நுழைந்து, பெண்சாதிக்கு இதம் உண்டாக இச்சக வார்த்தைகள் பேசி, தான் ஒரு பெண்போல அவளுக்குப் பேன்பார்த்து ஈர் உருவி, சமயம் நோக்கி மெள்ள அந்தச் செய்தியை அவள் காதிலே போகவிட, "ஏனவாயனைக் கண்

டாளாம் ஏணிபர்தம் பிடித்தாளாம்'' என்றதுபோல, அவள் தன் புருஷன் மேதக குணத்தைப்பார்த்துப் பூதம்போல ஆரவாரித்து "உன் பவிஷுக்கு விருந்து ஒருகேடா? உனக்குத் தொலைக்கிறதும் அல்லாமல் ஊர்க்குந் தொலைக்கவா?" என்று வாயில் வந்தபடி பேய்ப்பாட்டாகப் பேசி ஏசி, கழுநீர்ப் பானையை ஏந்திவந்து அவன் தலையில் அபிஷேகம் செய்து, திருவலகு [துடைப்பக்கட்டு] கொண்டு வெண்சாமரை வீசி, சுளகு [முறம்] எடுத்து ஆலவட்டம் பரிமாறி, பரிவேட்டை விடுவதுபோலத் தெருமுழுதும் அவனைத் துரத்தி அடித்தாள்; அது கண்டு ஔவை இந்தச் சரித்திரத்தை அவ்வாறு நடக்கும் பெண்களுக்குப் புத்தி வரும்படி,

"இருந்தங் கிதம்பேசி யிருநீ இப் பேன்பார்த்து
விருந்துவந்த தன்பன் விளம்பத்—திருந்தடியாள்
பாடினள் பேய்ப்பாட்டைப் பாரச் சுளகெடுத்துச்
சாடினு ளோடோடத் தான்"

என ஒரு பாடலாகப் பாடிப்போனாள். இவளும் பெண்பிறப்பிலே சம்பந்தப்பட்டாள் அல்லவா? கற்புடையவர்கள் இத்தன்மையாகிய துஷ்டைகள் முகத்தையும் பார்ப்பார்களா? இவர்களுடனும் பேசுவார்களா? நேசிப்பார்களா?

வித்வ சிரேஷ்டராகிய பொய்யாமொழிப் புலவர் பூர்வம் மதுரையில் முழுகிப்போன தமிழ்ச் சங்கத்தைப் பரிபாலனம் பண்ணும்படி அக்காலத்தில் அரசாண்டு இருந்த வணங்காமுடிமாறன் என்னும் பாண்டியன் இடத்தில் பேசுவதற்கு

அவனைத் தேடிப் போன பொழுது, அவன் கோயிலுக்கு சுவாமிதரிசனம் செய்யப் போயிருக்கிறதாகக் கேள்வியுற்று அவர் சொக்கநாதர் சந்நிதிக்குப்போய், அங்கு அவ்வரசன சுவாமியைச் சாஷ்டாங்கமாகச் சேவித்துக்கொண்டு இருக்கக் கண்டு புலவர் சிகாமணியானவர்,

"குழற்கா லரவிந்தங் கூம்பக் குமுத முகையவிழ
நிழற்கான் மதியமன் றோநின் றிருக்குல நீயவன்றன்
அழற்கா லவிர்சடை மீதே யிருந்துமவ் வந்திவண்ணன்
கழற்கால் வணங்குதி யோவணங் காமுடிக் கைதவனே'

என்னும் பாடலைப் பாடக்கேட்டு, அரசன் அவரை "நீர் ஆர்?" என்ன, அவர் "பொய்யாமொழி" என்னும் தமது காரணப்பெயர் முதலிய பூர்வோத்தரத்தையும் தாம்கொண்ட கருத்தையும் வெளியிட, பாண்டியன் 'இவரோ சங்கத்தைப் பரிபாலிப்பவர்' என்று எளிதாக நினைத்து, அங்குச் சங்கத்தார்க்குப் பிரதியாகச் சிலையினால் செய்துவைத்திருக்கின்ற விம்பங்களைக்காட்டி, 'நீர் பொய்யாமொழி என்றது மெய்யாகும் ஆயின், இந்த விக்கிரக ரூபமாயிருக்கும் சங்கப்புலவர் சிரகம்பம் கரக்கம்பம் செய்யப் பாடும்' என, அவர்,

"உங்களிலே நானொருவ னொவ்வேனோ வொப்பேனோ
திங்கட் குலனறியச் செப்புங்கள்—சங்கத்துப்
பாடுகின்ற முத்தமிழ்க்கென் பைந்தமிழு மொக்குமோ
ஏடவிழ்தா ரேழெழுவி ரே"

என்று பாட, அந்த விம்பங்கள் அங்ஙனமே சிரக்கம்பம் கரக்கம்பம் செய்தன. பின்பு பொற்றாமரை என்னும் தீர்த்தத்தருகில் அவரை அழைத்துப்போய் "இதில் முழுகிப்போயிருக்கின்ற சங்கப்பலகை மிதக்கப்பாடும் பார்ப்போம்" என, அவர்,

"பூவேந்தர் முன்போற் புரப்பா ரிலையென்றும்
பாவேந்த ருண்டென்றும் பான்மையால்—மாவேந்தன்
மாற னறிய மதுரா புரித்தமிழோர்
வீறணையே சற்றே மித"

என்று பாடினமாத்திரத்தில் அது மிதந்தது. இப்படிப்பட்ட பலசாதுர்சியங் [பிரத்தியட்சங] களால் அவரது கல்வியின் அருமையும் பெருமையும் பெரும்பாலும கண்டு தெளிந்தும், இறுமாப்பினால அவருக்குச் சமமானம் செய்யாமையால், இவன் தக்கோன் அல்லன் என்று, அவர் அங்கிருந்து திரும்பித் தமது சுதேசத்திற்கு வருகையில், இந்தச் செய்தியைப் பாண்டியன் மனைவி அறிந்து "அவர் பொய்யாமொழியார் ஆதலால் அவர் சொல்வது நன்றாயினும தீதாயினும் பொய்யாது பலிக்குமே" என்று நடுநடுங்கிப் "புலவர் பெருமான் கோபத்தை ஆறறவேண்டும" என்று தான் சிவிகை சுமப்பவரைப்போல வேடமபூண்டுவந்து, அவரது சிவிகையைச் சிலதூரம சுமந்து செல்ல, அவர் அதுகண்டு, அவளைநோக்கி "கற்புக்குத் தாயகம்போல்வாளே! நீயேன் இப்படிச்செய்தாய்" என, அவள் சுவாமீ! "இராஜா தேவரீர் விஷயத்தில்

அபசாரப்பட்டதை மனம் கொள்ளாது, தாம் கருணைகூர்ந்து அவரை வாழ்த்துதல் செய்யவேண்டும் என்னும் நோக்கத்தால் இங்ஙனம் புரிந்தேன்" என, அவர் "நன்று" என்று இராஜ பத்தினியை முன்னிட்டு,

"உமையாளு நீயு மொருங்கொப்பே யொப்பே
உமையாளுக் கங்குண்டோ ரூனம்—உமையாடன்
பாகந்தோய்ந் தாண்டான் பலிக்குழந்தான் பாண்டியனின்
ஆகந்தோய்ந் தாண்டா னரசு"

என்னும் பாடலைப் பாடினார். இவ்வரசன் தேவிபோல மனைவி புருஷனுடைய குற்றத்தால் அவனுக்கு வரும் தீங்கினை ஆராய்ந்து உணர்ந்து வாராமற்காப்பது அல்லவோ விசேஷம்.

தெய்வப்புலமைத் திருவள்ளுவர், தங்தேசுயரில்லாள் வாசுகி யென்னும், மாசற்று ஒளிரும் மணிவிளக்கு ஒத்தவள், பொற்பு விளங்கிக் கற்புவழுவாது, இல்லறம் நடாத்தி இன்புற்று வாழ்ந்து, மாண்டபின்பு மயானத்திற் கொடுபோய்த், தகன சமுஸ்காரம் தான்செயப் படுகையில், நெடுநாள் நகமுஞ் சதையும்போலவும், உடலும் உயிரும்போலவும், மனது ஒத்துப் பிரிவற்று இருந்த அருமைமனைவியைப் பிரியவேண்டிவந்தமைபற்றி, அவர் துக்கசாகரத்தில் ஆழ்ந்து கண்ணீர் விட்டு அவளை நோக்கி, "வேழம் உண்ட விளங்கனியாகி, சிற்பரால் எழுதரும் பொற்பாவை போல்வாளே! என்நாவிற்கு இனிய அறுசுவை உணவும் அமைத்து என் அருகில் இருந்து என்னை உபசரித்து உண்பித்துப் போஷிக்கின்றவளே! என்

னிடத்தில் அனவரதமும் மாறாத உள்ளன்பு உடையவளே! தெருவாசற்படி கடவாதவளே! என் வாய்ச்சொல்லை எதிர் மறுத்து உரையாது, கடவுள் வாக்காகிய வேதம்போல உண் மையாகக்கொண்டு நடப்பவளே! இரவில் என்பாதத்தை நெடு நேரமாக வருடி பிடித்துக்கொண்டிருந்து, நான் நித்திரை செய்தபின்பு என் கால்மாட்டிலேயே சிறிதுநேரம் நித்திரை செய்து, நான் விழிப்பதற்குமுன் விழித்து எழுந்திருப்ப வளே! நீ இப்பொழுது என்னைவிட்டுப் பிரிந்துபோய் விடு கின்றையே, இனி நான் எப்படிக் கண் உறக்கம் கொள்வேன்!" என்னும் கருத்தை உள்ளிட்டு,

"அடிசிற் கினியாளே யன்புடை யாளே
படிசொற் கடவாத பாவாய்—அடிவருடிப்
பின்றூங்கி முன்னெழூஉம் பேதையே போதியோ
என்றூங்கு மென்க ணிரா"

என்பது முதலாகிய சில செய்யுளைப்பாடி வியசனப்பட்டார். யோகிக்கும் இடத்தில் தாமரையிலை நீரும் புளியம்பழமும போல மனைவாழ்க்கையில் ஒட்டாத மகாத்மாவாகிய அவரும் அந்த மாதர்க்கு அரசியின் நற்குண நற்செய்கைகளினால் அல் லவோ சிலேஷ்டுமத்தில் அகப்பட்ட ஈயைப்போல அப்படிப் பரிதவிக்கும்படி வந்தது.

பதிவிரதைகள் கணவனது பாதம் விளக்கிய நீரைக் கங்கா தீர்த்தமாகவும், அவன் உண்ட மிச்சிலைத் தேவதா பிர சாதமாகவும், அவன் பாத சேவையைப் பரமார்த்த தரிசன

மாகவும், அவன் வாய்ச்சொல்லைக் குருஉபதேசமாகவும் கொள்வதே யன்றி, வேறே தீர்த்தம் பிரசாதம் தரிசனம் மந்திர உபதேசம் உண்டென்று மதிப்பதில்லை.

தங்கணவன் மற்றபுருஷர் அவனைக்கண்டு "நாம் பெண்ணாய்ப் பிறந்தால் இந்த மகாபுருஷனைத் தழுவலாமே" என்று விரும்பத்தக்க பேரழகு உடையவன் ஆனாலும், இளங்காளை போலும் அதிக யௌவனமும உடையவன் ஆனாலும், சுரபேதம லயபேதம் தெரிந்து நரம்போசையும் குரலோசையும் வேறுபடாது நயமாகப் பாடுகின்ற சங்கீத சாமர்த்தியன் ஆனாலும, தன்னைநோக்கிய பெண்களின் பார்வைகளையெல்லாம் கவர்கின்ற விசாலமாகிய கமலதளம்போன்ற அழகிய பார்வையுடையவன் ஆனாலும், ஆண்சிங்கம்போலும் பெருமிதமான நடையுடையவன் ஆனாலும, மலைபோல அளவில்லாத பெருஞ்செல்வம் உடையவன் ஆனாலும், தமக்கு அவன் சாட்சாது அத்தைமகன் ஆனாலும, தாம் அவனுக்கு அம்மான் புத்திரிகள் ஆனாலும், பெண்களுக்குப் பெரும்பாலும் அந்நிய புருஷர்மேல் மனம் செலலும் என்பதனால், சபலசித்தம் கொண்டு கற்பு அழியாது அதனை உறுதிப்படுத்தி நல்லொழுக்கத்தில நீங்காது நிற்கவேண்டும்.

வேதம் ஓதுகின்றவர்களுக்கு ஒரு மழையும், செங்கோல் செலுத்துகின்றவர்களுக்கு ஒரு மழையும், கற்பு உடையவர்களுக்கு ஒரு மழையுமாக அல்லவோ மாதம் மும்மாரிபொழிகின்றது.

கிரமம் தப்பிய வேதியர்களுக்கு ஒரு மழையும், கொடுங்கோல் மன்னர்க்கு ஒரு மழையும், புருஷனைக் கொலைசெய்யும் பெண்களுக்கு ஒரு மழையுமாக அல்லவோ வருஷம் மூன்று மழை தாறுகின்றது.

முற்காலத்தில் கற்பு உடையவர்களில் சந்திரமதி காட்டுத்தீயைக் குளிரச்செய்தாள். தமயந்தி தன்னை இச்சித்த வனவேடனை எரித்தாள். அநுசூயை தன் கற்பைச் சோதிக்கவந்த திரிமூர்த்திகளைக் குழந்தைகளாக்கி ஸ்தன்ய பானம் பண்ணுவித்தாள். சாவித்திரி தன் நாயகன் உயிரை யமன் கொண்டு போகிற தருணத்தில் அவனுடனே வாதாடி மீட்டாள். நளாயனி ஆணிமாண்டவியர் சாபத்தால் தனக்கு வைதவியம் வாராது பொழுது விடியாதிருக்கப் பிரதிசாபம் இட்டுத் தேவர்கள் வேண்ட விடிய அநுக்கிரகித்தாள். திருவள்ளுவநாயனார் மனைவி கணவனது பணிவிடையில் இருக்கையில், ஒரு தவசிவந்து பிச்சைகேட்கப் பிச்சையிடக் காலதாமதப்பட்டமையால், அவன் கோபங்கொண்டு அவளை எரிக்கும்படி உறுக்கிப்பார்க்க, அவள் அந்நினைவை அறிந்து "கொக்கென்று நினைத்தனையோ கொங்கணவா" என்றாள். இப்படியெல்லாம் இருப்பதனால் அல்லவோ கற்புடையவர்களின் மகிமை தேவர்கள் முனிவர்களாலும் அளவிடற்கு அரிதென்று சொல்லப்படுகின்றது.

மரக்கலத்தை ஆதாரவாகக்கொண்டு கடற்கரை ஏறுகின்றவர்களைப்போல, புருஷன் இல்வாழ்க்கைக்குத் துணையாகக்

கற்பு உடைய மனைவியைக்கொண்டு, பிரமசாரி, வானப்பிரஸ்தன், சந்நியாசி முதலியோரை உபசரித்தல் ஆதியாகிய அறங்களைச்செய்து மோட்சக் கரை ஏறுதற்கு அவனுக்கு அவள் அநுகூலமாயிருந்து தெய்வ கடாட்சத்தால் நல்ல புத்திரர்களைப் பெற்றுப் புகழ்பெற வாழவேண்டும்.

கற்புநிலைமை

முற்றிற்று

